Regd. No. 2975

ஸ்ரீ

# ஸ்ரீராமாநுஜன்-382

ஆசிரியர் P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

Editor:

Mahamahimopadhyaya

P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருட சந்தா ரூ. 10

~~Released by Maran's Dog, Toronto, Canada~~

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

~~Released by Maran's Dog, Toronto, Canada~~

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ரௌத்ரி ௵ வைகாசீ 1980

acharya.org

ஸ்ரீராமாநுஜன் - 382







ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 33 | ரௌத்திரி ஞூ வைகாசி மீ 1980 ஜூன் மீ | பகுதி 2

## வையங்கண்ட வைகாசித் திருநாள்

சென்றவிதழில் வெளியிட்டிருந்தபடி தேவப்பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவம் 26-5—80 ல் த்வஜாரோஹணமாகி 1—6—80ல் (ஏழாந் திருநாளன்று திருத்தேரில் எழுந்தருளியாயிற்று. அன்று காலையே வடம் பிடித்திழுக்க ஆரம்பமாகியும் திருத்தேர் நிலைசேர நான்குநாள் தாமதமாகிவிட்டது. திருத்தேரில் செப்பனிட வேண்டிய பாகம் மிச்சப்பட்டிருந்ததே காரணம் 4-6-80ம் தேதி திருத்தேர் நிலைசேர்ந்து 6-6-80உ அவபிரதம்கண்டருளி மறுநாள் துவஜாவரோஹணமுமாயிற்று வெய்யில் பொறுக்க முடியாததாயிருந்தாலும் ''வையங்கண்டவைகாசித் திருநாள்'' என்னும் பழமொழிக்கு ஏற்ப மாமூல்படி உலகமெல்லாம் திரண்டு வந்து ஸேவிக்கும்படியாகவேயிருந்தது.



உயர் திரு. E o அவர்கள் அக்கரையுடன் கூடவிருந்து காலகாலத்தில் உத்ஸவத்தை நடத்தி வைத்தது குறிப்பிடத்தக்கது. ... ... ...

acharya.org

# ஸ்ரீமதுபயவே வித்வான் ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திற்கு விடையளிப்பு (பத்ராதிபர்)

திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே மதுராந்தகம் வித்வான் வீரராகவாசாரிய ஸ்வாமி ஸமீபத்தில் வெளி வந்த நமது நவதிவாக்யமய நவரத்னமாலா என்னும் நூலின் வடமொழிப் பகுதியைக் கடாக்ஷித்தருளி "ஸம்தாபயதி ஸ்வம் தேஹம் ஆபாததல மஸ்தகம்" என்னும் நிலைமை யெய்தி 28—5—80 உ ஒரு ஸ்ரீமுகமருளினரடி யேனுக்கு. அது 1—6—80 உ அடியேனுக்குக்கிடைத்து உத்ஸவாநுபவ வ்யக்ரதையாலும் தேஹாரோக்யக் குறைவினாலும் சிறிது தாமதித்துப் பார்க்க நேர்ந்தது ஸ்வாமியின் சிலபல கட்டுரைகள் ந்ருஸிம்ஹப்ரி யாவிலும் ஸ்ரீரங்கநாத பாதுகாவிலும் வெளி வருவது போல, இதையும் அந்தப்பத்ரிகை மூலமாகவே வெளிவரச் செய்திருந்தால் உலக மெல்லாம் கண்டு களிக்க ப்ராப்த மாயிருக்கும். நிற்க. ஸ்ரீமுகத்தில் முக்யமாக ஸ்வாமி எழுதியிருக்கும் விஷயமென்னவென்றால், பிள்ளை லோகாசாரியர் ஸ்ரீநிகமாந்தமஹாகுருவை ஆச்ரயித்து வேதாந்த க்ரந்தங்கள் ஸேவித்து "சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான் பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று, தானே அமை, யாதோ தாரணியில் வாழ்வார்க்கு, வானேறப் போமளவும் வாழ்வு" என்னும் வெண்பாத்தனியனை யருளிச்செய்து உய்ந்து போனார்- என்பது ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீமுகத்தில்கண்ட ஸாராம்சம். இச்செய்யுளைப் பற்றின சர்ச்சை 50, 60 வருடங்களுக்கு முன்பு விசேஷமாக நடந்து ஓய்ந்திருந்தது. இப்போது மறுபடியும் கிளப்பப்படுகிறது. துஷ்யது ந்யாயே ந விஜ்ஞாபயே.

பிள்ளை லோகாசாரியர் தேசிகன் பக்கலில் காலக்ஷேபம் செய்தா ரென்றால் இதை மறுக்க வேண்டிய அவசியமில்லை. அப்ரதிமமான பாண்டித்யப்ரகர்ஷம் பெற்ற தேசிகன் அநதிகாரியல்லர். ஹயக்ரீவோ பாஸனை செய்து (அவருடைய ஸ்தோத்ரத்தில்) "ஜிகீஷேதோ மே கவிதார்க்கிகேந்த்ராந் ஜிஹ்வாக்ர ஸிம்ஹாஸநமப்யுபேயா:" என்று ப்ரார்த்தித்துக் கொண்டபடி கவிதார்க்கிகஸிம்ஹமாய் ஸர்வதந்த்ர ஸ்வதந்திரரான ஸ்வாமிபக்கலில் அத்யாத்மவித்யையை அதிகரித்தா ரென்றால் இதனை மறுக்க வேணுமோ? "சீரொன்றுதூப்புல்" என்கிற அஸம்பாவிதோக்தி யொன்றை மட்டும் மறுப்பர் பெரியோர். தேசிகன் திருநாட்டுக் கெழுந்தருளின பிறகு 300, 400. வருடங்களுக்கு இப்பால் தீக்ஷிதரால் ப்ரதிஷ்டாபிதமான தும்பைவனம் என்னும் அக்ரஹாரம் தூப்பிலாக வழங்கப்பட்டதென்பது அவருடைய சரிதையில் ஸ்பஷ்டம்

மான விஷயம்; திருத்தண்காவென்கிற திவ்யதேசபரிஸரத்தில், திருவவதரித்த ஸ்வாமிக்கு "சீரொன்று தண்காத் திருவேங்கடமுடையான்" என்று துதி அமைய வேண்டியிருக்க,...... அந்தோ! இஃதுஎன்ன விபரீதம்.

விளக்கொளியெம்பெருமான் ஸன்னிதிக்கு மிக அருகில் வேளுக்கையென்னும் திவ்யதேசம் விளங்கா நின்றது. தேசிகன் காமாஸிகாஷ்டகமென்கிற துதியும் அதற்கு இட்டருளினர். "மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை" என்றருளிய ஆழ்வார், கச்சிவேளுக்கையென்றுரேயன்றி தூப்புல் வேளுக்கையென்றுரல்லர். இந்த பிஷ்ட பேஷணம் கிடக்க. இந்த வெண்பாவைப் பிள்ளை லோகாசாரியர் அருளியிருந்தாராகில், "சீரொன்று கச்சித் திருவேங்கடமுடையான்" இத்யாதியாகவே அருளிச்செய்திருப்பர். நன்னூலில் சிறப்புப்பாயிரம் (தனியன்) கூறுதற்கு அதிகாரிகளைக் கூறுமிடத்து, "தன்னாசிரியன் தனொடு கற்றோன், தன்மாணுக்கன் தருமுரைகாரனென்று இன்னோர் பாயிரமியம்புதல் கடனே" என்று ஆசாரியனையே முந்துற முன்னம் எடுத்திருக்கையாலும் "தொழுகிறேன் வணங்குகிறேன்'. என்றில்லாமையாலும் இத்தனியனை உண்மையில் ஆசாரியரான பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்திருக்கத்தடை சிறிதுமில்லை.

முக்கியமாக வெண்பாவின் ஸாரமான பொருள்- தேசிகனருளிச்செய்த அர்த்த விசேஷங்கள் ஒவ்வொன்றும் லோகோஜ்ஜீவனமானவையென்பதாம். இதை எந்த மூடனும் ஆக்ஷேபிக்க முடியாதல்லவா? தேசிகனைப் போன்ற மஹாசார்யர் உலகில் அவதரித்ததுமில்லை; அவரைப் போல் அற்புதமான அர்த்தவிசேஷங்களை வெளியிட்டருளினவருமில்லை. மிகமிக வாய்ப்பான தனியன் இது,

— மேலே குறிக்கொண்மின் —

1 "ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷபூதையாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள். இவளைப் புருஷகாரமாக்க வேண்டுகிறது ஈச்வரன் தண்டதாரனாகையாலே" என்கிற ரஹஸ்யரத்நாவளிஸூக்தியொன்று போதுமே தேவரீரும் உலகமும் வாழ.

2. "அநாதி காலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப்போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்

acharya.org

தாலே வந்த த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களையெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ளவல்ல ஸர்வசேக்ஷியான ச்ரிய: பதி தன் பேறாகத்தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிருவென்கை; இது *மாசுச:* என்கிற சரமச்லோக வாக்யத்திலும் தீர்ந்தபொருள்." என்று ரஹஸ்யத்ரயஸாரக்ருதக்ருத்யாதிகாரத்தில் தமிழிலெழுதினதை சரணாகதிகத்யபாஷ்யாவஸாநத்தில் வடமொழியாலே லவலேசமும் மாறுபாடின்றிக்கே எழுதிவைத்ததில் ஒரொன்றுதானே அமையாதோ உலகம் வாழ? ஸ்வாமிந்! என்ன சொல்லுகிறீர்? சொல்லும்.

3. "இப்படி ஸித்தோபாயத்தைப்பற்ற ஸாத்யோபாயம் வ்யாஜமாத்ரமாய் இது ப்ரதாநமன்றிக்கே நிற்கிற நிலையைப்பற்ற ஸம்பந்தஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம் அநுமதிமாத்ரம், அசித்வ்யாவ்ருத்திமாத்ரம், சைதந்யக்ருத்யம், சித்தஸமாதானம், அதிகாரி விசேஷணம் என்றிப்புடைகளிலே அதிவாதம் பண்ணினார்கள். இவ்வநுயபரோக்தியைக் கொண்டு இவைதானே அர்த்தமென்று அறுதியிடவொண்ணாது; இவையெல்லாம் *சரணம் வ்ரஜ* என்கிற விதிக்கு விருத்தங்களாம்" என்று ரஹஸ்யத்ரயசாரசரமச்லோகாதிகாரத்திலெழுதிவைத்து, ஸாரஸார சரமச்லோகாதிகாரத்தில் "இப்படிவிதேயமான ப்ரபதனத்தைச் சிலர் அதிகாரிவிசேஷணம் என்றாப்போலே சொல்லுமதுவும் இவ்விதிக்கும் இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்திரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்யகத்யாதிகளுக்கும் அநுகுணமாக வேண்டுகையாலே *நானே நானாவித நரகம்புகும் பாவஞ் செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிறவிடத்தில் வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரணயத்னம் * அதுவும் அவனதின்னருளே —இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்தும் அம்மானே! இத்யாதிகளிற்படியே அவன்தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோ வென்று ஸித்தோபாயப்ராதாந்யாநுஸந்தானத்தில் அவர்களுக்கு தாத்பர்யம்" என்றெழுதிவைத்தவற்றில் ஒரொன்றுதானே அமையாதோ வாழ்வுக்கு? சொல்லுமைய்யா சொல்லும்.

4. பரமபதஸோபாந ரஹஸ்யத்தின் உபக்ரமத்தில்— "அசேஷசிதசித்வஸ்து சேஷியான ச்ரிய: பதிக்கு அநந்யார்ஹ நிருபாதிக சேஷபூதராய் அந்தமில் பேரின்பத் தடியரோடிருந்து அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனைத் தினைத் தனையும் விடாதே அநுபவிக்க ப்ராப்தரான க்ஷேத்ரஜ்ஞர் அநாத்யவித்யா கர்மாதி ப்ரவாஹத்திலொழுகிக்

acharya.org

கரையேற விரகற்று அலமருகின்ற படியைக் கண்டருளின பரமகாருணி கனை பரம சேஷி தானே ஞானக் கை கொடுத்து இவர்களை யெடுக்க இடம் பார்த்து அஜ்ஞாதயாத்ருச்சிக ஆநுஷங்கிக ஸாமாந்ய புத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வியாஜமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி அத்வேஷ ஆபிமுக்ய ஸாத்விகஸம்பாஷணாதிகளையுண்டாக்கி" —என்றதில் ஒரு சொல்தானே அமையாதோ வாழ்வுக்கு? ஸாதித்தருள வேணும் ஸ்வாமிந்!

5. "*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்குமாகையாலே இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலுப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்க மாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டிய வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து, அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போல அண்ணுந்திருத்திறவினை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாகவெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று...* என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவு மவனதின்னருளே யென்றும்* *இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழிருத்து மம்மானே* யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாயபூதனை அவன்செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாகவெண்ணுகை உசிதமன்றென்று(ஏக)சப்தத்துக்குதாத்பர்யம்' என்கிற ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரவாக்யத்தில் ஒரொன்றுதானே அமையாதோ?

6. கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையில் "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாது த்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வாநுபபத்தேச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷஸாதநதாபுத்திரபி ஸ்யாதிதி பாவ:" என்கிற வாக்யச்ரேணியில் ஒரெழுத்துத்தானே அமையாதோ? இதெல்லாம் பிள்ளையுலகாசிரியரின் பதவிணை பணிந்து கேட்டவை யென்கிற தத்துவமுணர நம் மதுராந்தக ஸ்வாமியுமா அசக்தர்?

7. த்ராணே ஸ்வாமித்வமௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண: ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா கருணா விபோ:" "இயம் கேவல லக்ஷ்மீ சோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணம்" "ஸ்ரீரங்கேச்வர யாவதாத்மநியதத்வத்பாரதந்த்ர்யோசிதா" "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ்டாந்தவர்ணநம்,

acharya.org

அஹங்காராந்வயேது ஸ்யாத் ப்ராபத்தாவபி பந்திவத்" "ஸாத்விகோ பகவாந் ஸ்ரீமாந் ஸாத்விக்யாத் பரதைவதம், ரஜஸ்தமோந்வயேது ஸ்யாத் தஸ்யாப்யவாந்தைவதா" "அஷ்டாக்ஷரோ மூலமந்த்ர: ச்ரேயாந் சிஷ்டபரிக்ரஹாத், பரை: பரிக்ரஹே து ஸ்யாத் தஸ்யாப்யவர மந்த்ரதா" "மோக்ஷப்ராதே பகவதி பக்தௌ க்ருத்யந்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே:" இத்தகைய காரிகைகளில் ஒரொன்று தானே அமையாதோ? இப்படிலோகோஜ் ஜீவனமாக அருளிச்செய்த திவ்யஸூக்திகள் ஆயிரக்கணக்கிலன்றோ வுள்ளன. இவற்றின் சுவடறியவறியத் தனியனிடாமலிருக்க முடியுமோ? ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமிக்கு தேசிகன் தனியனிடவில்லையா?

" ஸ்ரீமத் பரமஹம்ஸ தேரழுந்தூராண்டவன் காஞ்சியில்: அடியேன் குடிலுக்கு அருகாமையில் சிலபலஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்த காலத்து அடியேனுக்கு நிர்ப்பந்தமாக ஒரு நியமனமாகியிருந்தது;— "நித்யம் ஒருமணிகாலத்திற்குக் குறையாமல் இங்கு வந்து ஸல்லாபம் பண்ணிப்போகவேணும்"— என்று. அப்படியே நியதமாக நடந்து வந்தது. நாடோறும்சிரிக்கச்சிரிக்க ஏதேனும் ஸாதிந்தருள்வர். ஸ்ரீமத் ஆக்கூராண்டவன் [க்ருஹஸ்தசுகை] நியமேந கூடவேயிருக்க நேரும். ஒருநாள் "சீரொன்று தூப்புல்" ப்ரஸ்தாவம் வந்தபோது, ஆக்கூர் ஸ்வாமி "இது பிள்ளை லோகாசார்யர் ஸாதித்ததாமே" என்றார். அதற்குத் தேரழுந்தூராண்டவன் ஸ்மயமாந முகாரவிந்தராய் "பிள்ளைலோகாசார்யராவது ஸாதித்திருக்கட்டும்; பெரியலோகாசாரியராவது ஸாதித்திருக்கட்டும்; பாரொன்றச் சொன்ன பழமொழியுள் என்பதற்கு என்ன பொருள் என்றார். பூமியெல்லாம் ஒன்று சேரும்படி சொன்ன— என்று பொருளாகாதோ? என்றார் ஆக்கூர்ஸ்வாமி. அதன்மேல்பேச்சுக்கள் பலவாகிஹாஸ்ய ரஸத்தோடு முடிந்தது. *காரொன்றச் சொன்ன கனமொழியுள்* சேரொன்றச் சொன்ன சிறுமொழியுள்* ஊரொன்றச் சொன்ன உறுமொழியுள்* என்று எப்படி சொன்னாலும் ஒரு அர்த்தம் சொல்லிவிட முடியாதா? என்றருளினார் ஆண்டவன்; நிற்க. *

பிரபந்தசாரம் என்று ஒன்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே; அதற்கு என்ன அர்த்தம்? என்று ஒருநாள் விசாரம் நிகழ்ந்தது. நிற்க

திருமங்கை மன்னன் பெரிய திருமொழியில் *புள்ளுருவாகிப்பதிகத்தில் ஒன்பது பாசுரங்களிலும் ஒன்பது பழமொழிகளையருளிச் செய்து நிகமனப் பாசுரத்தில் "பழமொழியால் பணிந்துரைத்தபாட்டிவை" என்றார், அங்ஙனே * பாரொன்றச் சொன்ன பழமொழிகள் எவை? என்று கேட்டால் •பச்யேம சரதச்சதமென்று ககநம் பச்யேத் நமது நண்பர்.....
"அவர் அப்படி கலங்குவர்; இவர் இப்படி கலங்குவர்; அந்த கலக்கத்தைத்

acharya.org

சமிப்பித்தோம், இந்த கலக்கத்தை சமிப்பிக்கிறோம்" என்னும் பழிமொழிகள் பிரளயமாகவுண்டு. இங்ஙனே பாடத் திருத்தங்கள் பல செய்யவேண்டும். நமது நண்பர் வாளாவிருக்கவில்லாமல் எதையாவது கிளப்புவரே யல்லது விசாரம் நிகழ்ந்தால் வாய் திறந்தொன்று பணிக்கவில்லார்.

"இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும் பற்றினது விடாதொழியில்" என்கிற ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார திவ்ய ஸ்ரீஸூக்தியில் "மத்யஸ்தத்ருஷ்டியாலே தோற்றின ப்ராமாணிகார்த்தங்கள் எவை? பற்றினது விடாதே பேசின அர்த்தங்கள் எவை? பேசினவர் யாவர்?" என்கிற கேள்வி அறுபது வருஷமாகத் தொடர்ந்து வாரா நின்றது. ...... அதிகரண ஸாராவளியில் "பாஷ்யாதிக்ரந்தலேசாபி அநவஹிதமநஸாம் ஹ்ருதமர்த்யம் பஜேத." என்ற விடத்தில் "அநவஹிதமநஸாம் தோற்றுமர்த்தம் எது? அநவஹிதமநஸாம் தோற்றும் அபார்த்தம் எது? அவதாநே ஸதர்த்தத்தையும் அநவதாநே அஸதர்த்தத்தையும் தோற்றுவிக்கிற பாஷ்யாதிக்ரந்தலேசம் எது?" என்கிற கேள்விக்கு × ஜீவேம சரதச்சதம் × மாத்யாஹ்நிகஸமயத்தில் போய்க் கேட்டால் பளபளவென்று ஸாதித்தாரும்.

நமது கேள்விகள் ஜிஜ்ஞாஸையினாலே யல்லது ஜிகீஷையாலன்று: ஒன்று கேட்டால் ஒன்றைக்கிளப்புவதென்கிற வழியை விட்டு விடுவது நன்றென்று ஸவிநயம் விஜ்ஞாபித்து விரமிக்கிறேன். ... ...

ஸஹ்ருதயஸஹ்ருந்மணியான நம் மதுராந்தக ஸ்வாமிக்கு ஓர் அபூர்வ விஷய விஜ்ஞாபனம்:- அதிகரணஸாராவளியில் பதினைந்தாம் சுலோகம் வருமாறு:—

"வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபாசிததயா ஷோடசாத்யாய்யுபாத்தா ஸங்கர்ஷ: காசக்ருத்ஸ்நப்ரபவ இதி கதம் தத்வரத்நாகரோக்தி:?. அத்ர ப்ரூம: ஸதுர்தௌ நயமிஹ முதா பாதிதும் கிஞ்சிதர்ஹா நிர்வாஹ ஸ்தூபசாராத் க்வசித் இதி கடதேஷ்வேகதாத்பர்யயோக:'
போதாயநமஹர்ஷி பணித்த வ்ருத்திக்ரந்தத்தில் "ஜைமிநீயேந ஷோடசலக்ஷணேந" என்று பூர்வமீமாம்ஸை பதினாறு அத்யாயமும் ஜைமிநி மஹர்ஷி பணித்ததாக ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டுள்ளது; பட்டர் பணித்த தத்வரத்நாகரமென்னும் க்ரந்தத்தில் – முந்தின பன்னிரண்டு அத்தியாயமே ஜைமிநிமுனிவர் இயற்றியதாகவும், ஸங்கர்ஷ காண்ட–

acharya.org

மென்கிற மேல் நான்கு அத்தியாயங்கள் காசக்ருத்ஸ்நமுனிவர் பணித்ததாகவும் கூறப்பட்டது; இந்த பரஸ்பர விரோதத்தை எப்படி போக்குவது? என்று பூர்வார்த்தத்திலுல் சங்கையைக்கிளப்பி, இருவரும் ப்ராமாணிகர்களாகையாலே ஒருவருடைய உக்தியையும் தள்ளுவதற்கில்லை: ஔபசாரிகமாக உபயக்ரந்தங்களையும் நிர்வஹித்துக்கொள்ளலாமாகையாலே விரோதமில்லை என்று உத்தரார்த்தத்தில் முடிக்கப்பட்டது. இதனால் ஆழ்வான் திருக்குமாரரான பட்டருடைய ஸ்ரீஸூக்திக்கு மஹர்ஷிவாக்கோடொப்ப ஆதரணீயத்வம் ஆவிஷ்க்ருதமாயிற்று. உண்மையில் எப்படி ஸமாதாநம் பண்ணியிருக்கவேணுமென்றால், பட்டர் அர்வாசீநராகையாலும் காசக்ருத்ஸ்நர் மஹர்ஷியாகையாலும் அவருடைய உக்தியின்படியேதான் ஸித்தாந்தம் செய்யவேண்டுமென்று நிகமித்திருக்கவேண்டும். தேசிகன் ஏன் அந்த வழியைக் கைப்பற்றவில்லை? பட்டரிடத்திலுள்ள ப்ராமாணிகதாதிசய ப்ரதிபத்தியினாலேயே-என்னத்தட்டில்லை. தேசிகனுக்கு பட்டர் ஸ்ரீஸூக்தியிலுள்ள கௌரவாதிசயம் விளங்குமிதனால்.

அத்தகைய வீறுபெற்ற பட்டர் அஷ்டச்லோகியில் த்வயார்த்த நிர்வாஹபரமான ஆறுவது சுலோகம் எவ்விதமாகப் பணித்தாரென்னில்;

ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம்
ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதா கில குணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே
இஷ்டோபாயதயா ச்ரியாச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:!!

மதுராந்தகஸ்வாமிந்! இந்த சுலோகம் கண்டபாடமாகியுள்ளதா? இதில் மூன்று யோஜனைகள் தெரிந்தனவா? ச்ரியம் ஸம்ச்ரித்ய ஹரேரங்க்ரீ இஷ்டோபாயதயா, ஆச்ரயே — ச்ரியாச ஸஹிதாய ஆத்மேச்வராய அசேஷம் தாஸ்யம் கர்த்தும் அர்த்தயே என்றிப்படி வாக்ய யோஜனைகளாகப் பணித்துள்ளார். முந்துற முன்னம் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றினமை சொல்லிற்று; பின்பு உபாயதயா எம்பெருமானைப் பற்றினமை சொல்லிற்று; அதன் பிறகு இருவருமான சேர்த்தியிலே கைங்கர்ய ப்ரார்த்தனை சொல்லிற்று. உபாயதயா என்பது எங்ஙனே சொல்லப்பட்டதென்பதை உற்று நோக்கவேணும். உபாயதயா ஆச்ரயணத்தைச் சொன்னவிடத்தில் ச்ரியாச ஸாஹித்யம் சொல்லிற்று? என்பதை நோக்கவேணும். இதை தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்திலே ஸமிக்கிறாரா? தூஷிக்கிறாரா? என்பதை புத்திமான்கள் கண்டுபிடிக்கவேணும்.

உபலக்ஷண விசேஷணபதங்களையிட்டு இவ்வர்த்தத்தைக் கண்டிக்கிறார் தேசிகன் என்று க்ரஹியாமல் ஸ்ரீமத் இஞ்சி மேட்டழகிய சிங்கர் தமது ஸம்போதிநீவியாக்கியானத்தில் தேசிகன் ஏதோ மருண்டு எழுதிவிட்டதாக நினைத்து "இப்படி ஏகதேசிகளும் சொல்லவில்லை, சொல்லவும் போகாது" இத்யாதிகளை வரைந்துள்ளார். அதையெல்லாம் ஆர அமர விமர்சித்து ஒழுங்குபடுத்தவல்லரோ நமது நண்பர்? இதையெல்லாம் விட்டு வேறொரு காட்டிலே பாய்ந்து எதையேனும் கிளப்புவர்.

acharya.org

# ஸ்ரீவைஷ்ணவ தேவாலய தர்மபரிபாலனம்

1. எம்பெருமான் பஞ்சப்ரகார விசிஷ்டனாக சாஸ்த்ரங்களில்கூறப் படுகிறான். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்னுமிவை பஞ்சப்ரகாரங்களென்று ப்ரஸித்தம். ப்ரமேயங்களில் தலையான எம் பெருமான் தன்னை இங்ஙனே ஐந்து வகையாக வகுத்துக்கொண்டது போல ப்ரமாணங்களில் தலையான வேதமும் இவ்வைந்து ப்ரகாரங்களுக் குச்சேர தன்னையும் ஐந்துவகையாக வகுத்துக்கொண்டது.

2. எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை **(1) பரத்வம்** எனப்படும். க்ஷீராப்தியில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண வகுப்புண்டு நிற்கும் நிலை **(2) வ்யூஹம்** எனப்படும். ஸ்ரீராமகிருஷ்ணாதிரூபேண அவதரித்து நிற்கும் நிலை **(3) விபவம்** எனப்படும். ×கரந்தெங்கும் பரந்துளன்× என்று உள்ளே பதிந்து நிற்கும் நிலை **(4) அந்தர்யாமித்வம்** எனப்படும். கோவில்களிலும் க்ருஹங்களிலும் ×தமருகந்தவுருவமாய் நிற்கும் நிலை **(5) அர்ச்சாவதாரம்** எனப்படும். இவை, ப்ரமேயபூத னான பகவானுடைய பஞ்சப்ரகாரங்கள்.

3. இனி, ப்ரமாணத்தின் பஞ்ச ப்ரகாரங்களைக் கேண்மின்; (1) வேதம் பலவிடங்களில் எம்பெருமானுடைய பரத்வநிலையைப் பேசுகை யாலே பரத்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை வேதம். (2) எம்பெருமா னுடைய வ்யூஹாவஸ்தையின் குணம் ரூபம் க்ருத்யம் முதலானவற்றைப் பேசுகைக்காக வேதமே பாஞ்சராத்ரமாக வடிவெடுத்ததாகையாலே, பக வானுடைய வ்யூஹாவஸ்தைக்குச் சேர்ந்த ப்ரமாண நிலை—பாஞ்சராத் ரம். (3) எம்பெருமானுடைய அந்தர்யாமித்வமானது அக்நி இந்திரன் வருணன் முதலான தேவதைகள் பக்கலிலேயுள்ளது. அவ்வோ தேவதை களைக் குறித்து நாம் பண்ணுகிற கருமங்கள் அந்தர்யாமியான எம்பெரு மானைச் சேருகின்றன வென்பது வேதாந்திகளின் கொள்கையாகும். ஆகவே எம்பெருமானுடைய அந்தர்யாமித்வம் கருமானுஷ்டானத்திற்கு உரியதென்று தேறிற்று. அப்படிப்பட்ட கர்மகலாபங்களை விவரிக்க மநுஸ்மிருதி முதலான தருமசாஸ்த்ரங்களாக அந்த வேதமே அவதரித்த படியாலே, அந்தர்யாமித்வத்திற்குச்சேர்ந்த ப்ரமாண நிலை-ஸ்மிருதிகள். (4) அப்பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசுவதற்காக அந்த வேதமே ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய

acharya.org

[நூற்றெட்டுத் திருப்பதிகளின்] அநுபவம் நமக்கு திவ்யப்ரபந்தங்களாலல்லது வேறென்றினாலும் ஸாத்யமன்றே. ஆழ்வார்களோ திவ்ய ஸூரிகள். அவர்கள் பாடின நூல்களோ திவ்ய ப்ரபந்தங்கள். அப்பிரபந்தங்களுக்கு விஷயமோ திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாக அமைந்த அமைப்பு அற்புதமென்பதை யாரறிவார்?

5. ஆழ்வார் திவ்யப்ரபந்த மருளிச்செய்யாதிருந்தால் விஷ்ணுவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்கள் அந்தோ! அழகிழந்து கிடக்குமேயென்று கம்பர் சடகோபரந்தாதியில் ×அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்த அரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும் தந்தம் விழாவு மழகு மென்னும்× என்கிற செய்யுளினால் கல்வெட்டாகக் கூறியுள்ளார்.

6. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இதிஹாஸ புராணங்களை மிகவும் விசேஷமாக இயற்றியிருந்தும் அவர்களை எந்த இடத்திலும் எந்தக் கோவிலிலும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து ஆராதிப்பது காண்கின்றிலோம். விஷ்ணு கோவில் ஒன்று தப்பாமல் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து பகவானுடைய வைப்பவத்திற்காட்டிலும் அவர்களுடைய வைபவமே ஓங்கும்படி செய்திருப்பதைக் காண்கின்றோம். இப்படி ஆழ்வார்களை ப்ரதிஷ்டை செய்து ஆராதிக்குமிக் காரியம் ஏதோ ஸமீப காலத்தில் ஏற்பட்டதோவென்று சங்கிக்க இடமில்லாதபடி ஸ்ரீ ராமானுஜர் காலத்தில் அவதரித்த நூல்களில் இது பொறிக்கப் பெற்றுள்ளது. ஒன்றே எடுத்துக் காட்டுவோமிங்கு. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் உடையவர் காலத்தில் திருவவதரித்து உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தர் என்பது ஜகத்ப்ரஸித்தம். அவர் தாம் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் நாற்பத்தோராவது ச்லோகத்தில் பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்× என்றுள்ளது. சந்திர புஷ்கரிணியின் கீழ்த்திசையில் ஆழ்வார்கள் பதின்மரும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு எழுந்தருளியிருப்பதாக இதனால் நன்கு விளங்குகின்றது. ஆகவே ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஸ்ரீரங்கம் கோவிலில் ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை பெற்றார்களென்பது பேர்க்கவும் பேராதபடியுள்ளது. தீமே நாம்விரிவாக

acharya.org

நிருபணம் செய்தபடி அர்ச்சாவதார வேதமாகிய திவ்யப்ரபந்தங்களுக்கே ஏற்றமானது பற்றியே விஷ்ணுவாலயங்களில் ஆழ்வார்களுக்கு இவ்வளவு வைபவம் அமைந்ததென்பதில் ஐயமில்லை.

7. பெரியார்கள் ஆழ்வார்களின் பாடல் பெருத விஷ்ணு கோவில்களில் பிரவேசிக்கத் தயங்குவது போலவே, ஆழ்வார்களின் விக்ரஹ ப்ரதிஷ்டையும் திவ்ய ப்ரபந்தாநுஸந்தானமுமில்லாத கோவில்களில் பிரவேசிக்கவும் தயங்குவர்கள். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளில் பிரவேசமில்லாதவர்களுக்கு மோக்ஷமே கிடையாதென்பதை ஸ்ரீமத் வேதாந்த வாசிரியர் பாதுகாஸஹஸ்ரத்தில் கூசாது கூறுகின்ருர். ஒரு ச்லோகமே இங்கெடுத்துக் காட்டுகின்றேன், ×த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணுய ரோசயிஷ்யந்× என்பது. இந்த ச்லோகத்தின் தாற்பரியமென்னவென்ருல், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் பிரவேச பாக்யமில்லாதவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லையென்று எம்பெருமான் விரதம் கொண்டிருப்பவனும். இப்படி யிருந்துவிட்டால் இவ்வுலகில் பலபல பேர்கள் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பை இழந்தே போக வேண்டிவரும். ஏனென்ருல், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் தமிழ் பாஷையில் அவதரித்திருப்பதாலும் அந்தப் பாஷையை அறியாதவர்களே உலகில் அதிக ஸங்க்யையாக இருப்பதாலும் அவர்களெல்லாரும் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பைப் பெறுவதற்கு ப்ரஸக்தியில்லையாய் விடுகிறது. உலகில் ஒருவர் தப்பாமல் எல்லாருமே எம்பெருமானுடைய இன்னருளுக்கிலக்காகி உய்வு பெறவேண்டுமென்று விசாலமான திருவுள்ளங்கொண்ட நம்மாழ்வார் ஒரு உபாயம் செய்தாராம். அவர் பகவானுடைய பாதுகையில் ஆவேசித்து, சடகோபனென்றும் சடாரியென்றும் தம்முடைய திருநாமத்தையே பாதுகைக்கு ஆக்கி, பெருமாளருகே வருகிற எல்லாருடைய தலையிலும் ஏறி வீற்றிருந்து, இவ்வழியினலே எல்லாரும் ஒருவாறு ஆழ்வார் ஸம்பந்தம் பெற்றவர்களாகி உஜ்ஜீவிக்கும்படி செய்துவிட்டாராம். இப்படி யருளிச் செய்தவர் வேதாந்தவாசிரியர். இதனுல், ஏதேனுமொரு விதமாக ஆழ்வாருடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதியுண்டென்றும் அது பெருதவர்களுக்கு ஸத்கதி கிடையாதென்றும் ஸ்ரீவைஷ்ணவ பரமாசார்யர்களின் ஸித்தாந்தம் கல்வெட்டாக இருந்ததென்று யாரும் காணலாம். எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஆழ்வார் திருநாமமன்ருேவுள்ளது,

acharya.org

8. இப்படி ஆழ்வார்களாலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளாலுமே மேன்மை பெற்ற விஷ்ணுவாலயங்களில் தர்மபரிபாலனம் செய்யுமதிகார பதவியை ஆளுமவர்கள் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் எது வென்பதை இனி நாம் விவரிக்கவேண்டிய அவசியமுளதோ? ஆழ்வார் களின் திருநக்ஷத்ரபரிபாலனாதிகள் செவ்வனே நடைபெறுகின்றனவா? என்பதையே முக்கியமாக முன்னம் கவனிக்கவேண்டும். அவ்வாழ்வார் களின் ஸ்ரீஸூக்திகளை ஓதுமதிகாரம்பெற்ற பெரியார்களைப் புரஸ்கரிக்க வேண்டிய முறைகளில் வழுவொன்றும் நேராதபடி கவனித்துக்கொள்ள வேண்டியதும் மற்றொன்று. இப்போது விஷ்ணுவாலயங்களில் பெரும் பாலும் ஸ்ரீவைஷ்ணவர்களல்லாத ஸ்மார்த்தர்ளும் மாத்வர்களும் எக்ஸி க்யூடிவ் டிரஸ்டி பதவியில் நியமனம் பெறுகிறார்கள். உண்மையில் இவர் கள் விஷ்ணுத்வேஷ மற்றவர்களாயும் விஷ்ணு பக்தியுக்தர்களாயுமிருப்ப தால் விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலக பதவிக்கு உரியவர்களே யாவர். ஆனால் இவர்கள் தங்களுடைய உரிமையை முழுதுமுணர்ந்து செவ்வனே செலுத்துதல்வேண்டும். ஆழ்வார்களிடத்திலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிடத்திலும் ஸ்ரீஸூக்திவல்லவர்களிடத்திலும் இவர்களுக்கு ஸ்வத: பக்தியிருக்கக் காரணமில்லை. ஆனாலும் ஆலய தர்ம பரிபால னஞ்செய்ய சம்பளம்பெற்று வந்துவிட்டபடியால் அந்தந்த ஆலயங்களின் நிபந்தனைகளுக்குப் பணிந்து ஒழுங்கான முறையில் நடக்க வேண்டியது கடமையாகும். ஒரு பெண் ஒருவர்க்கு இரண்டாவது மனைவியாக வாழ்க்கைப்படுகிறாள். இறந்துபோன மூத்தமனைவிக்குச் சிலமக்கள் இருந்தால் அந்த ப்ரஜைகளின் போஷணையும் இப்பெண்ணுக்கே கடமை யாகிறது. உண்மையில் அந்த ப்ரஜைகளிடத்தில் இப்பெண்ணுக்கு அன்புநிலை அஸம்பாவிதமானாலும் கைப்பிடித்த கணவனது முகமலர்ச் சிக்காக அந்த ப்ரஜைகளிடத்தில் மிக்க அன்புகாட்டிக் கணவனோடொப்ப அக்குழந்தைகளையும் போஷித்து நல்ல புகழ் பெறுகின்றாள். அதே முறைமையை இங்கும் ஆவாஹனம் செய்துகொள்ளவேண்டும்.

9. பிராமாணிகர்களாய் கம்பீரப்ரக்ருதி வாய்ந்தவர்கள் தாத ஏற்றுக்கொண்ட பதவியைச் சிறிதும் பழிப்புக்கிடமில்லாதபடியே யசஸ் கரமாக நடத்திக்கொண்டு வருகின்றார்கள். ஒரு நிதர்சனம் காட்டு கிறோம். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே அஸாதாரணமான திவ்யப்ரபந்த



acharya.org

பாராயணம் முதலிய சில விஷயங்களில் வழக்குகள் உண்டாகி நியாயா லயங்களுக்குப்போக நேர்ந்திருக்கிறது: முன்ஸிப் கோர்ட் ஜில்லாகோர்ட் ஹைகோர்ட் .. என்னப்படுகிற எல்லா நீதி மன்றங்களிலுமே மேற்படி வழக்குகள் சென்றிருக்கின்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் வழக்குகளைப் பரிஷ்காரம் செய்தவர்கள் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவரல்லாதாரும் பிராமணரல்லாதாருமே. அவர்களெல்லார்க்கும் திவ்யப்ரபந்தங்களில் அப்ரதிபத்தியும் விப்ரதிபத்தியும் பரிபூர்ணமாகவுண்டு: கோவில்களில் திவ்யப்ரபந்த பாராயணங்களை அறவே நீக்கிவிடவேணுமென்கிற அபிப்ராயமுடையாரது வகுப்பில் சேர்ந்தவர்களே அவர்கள் பெரும்பாலும். ஆயினும், நீதிபதி ஸ்தானத்தை வஹிக்கின்ற நாம் நியாயப்பழுதாக நடந்து கொள்வது கூடாது என்கிற தருமத்திற்குத் கட்டுப்பட்டே அவர்கள் திவ்யப்ரபந்தங்களுக்கு விஷ்ணுவாலயங்களிலுண்டான கௌரவத்தைச் சிறிதும் போக்காமல் அநாதியான வழக்கங்களை உண்மையான ரிகார்டுகளினாலும் பல முகாந்தரங்களிலும் தெரிந்துகொண்டு நீதி நன்னெறியையே செலுத்தியுள்ளார்கள். திவ்யப்ரபந்த பாராயண விஷயமாககோர்ட்டுகளில் வழக்கு உண்டாகப்பெறாத விஷ்ணுவாலயங்கள் சிலசிலவேயாகும். உண்டான வழக்குகளைத் தீர்த்தவர்கள் ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் ஜைனர்களும் யவனர்களும் கிறிஸ்துவர்களுமே பெரும்பாலுமாவர். அவர்கள் தங்களுடைய சொந்தக் கொள்கைக்கு மதிப்புகொடுத்து நீதி நன்னெறியில் நின்றும் விலகி ஜட்ஜ்மெண்டுகள் எழுதியிருந்தார்களாகில் திவ்யப்ரபந்தங்கள் மறைந்தே போயிருக்கும். அவ்வதிகாரிகள் யாவரும் திவ்யப்ரபந்தமே அர்ச்சாவதார வேதமென்கிற உண்மையை உள்ளபடி உணரப்பெற்று எள்ளளவும் நியாயவிபரீதம் செய்யாமல், தங்களுடைய சொந்தக் கொள்கையை வெகுதூரத்தில் விலக்கி உண்மையான நீதிபதிகளாய் நடந்துகொள்ளவே தான் திவ்யதேசங்களில் திவ்ய ஸூரிகளின் பெருமைகளும் திவ்யப்ரபந்தங்களின் பெருமைகளும் "படிக்குப்பாதி" என்கிற முறைமிலாவது விளங்கிக் கொண்டிருக்கின்றன.

10. அப்படிப்பட்ட ஆலயங்களுக்கு தர்ம நிர்வாஹகர்களாய் நியமிக்கப்பட்டுவந்து வேலை பார்க்கின்ற டிரஸ்டிகளும் அந்த நியாயத்திற்குக் கட்டுப்பட்டு அந்தப் பெருமைகளுக்குச் சிறிதும் குறை ஏற்படாதக்கு தர்ம பரிபாலனஞ் செய்துபோகவேண்டியதே கடமையாகும்.

acharya.org

11. திவ்ய தேசங்களுக்கு மிக முக்கியமான திவ்யப்ரபந்த பாராயணம் ஆங்காங்கு மலினமாகி வருகின்றது. உபபத்தி குறைவான தேவஸ்தானங்களில் ஏது எப்படி நடந்தாலும் விசாரமில்லை. நல்ல உபபத்தியுள்ள ஸன்னிதிகளில் விசேஷ காலங்களில் ஆயிரக்கணக்கில் செலவு செய்து நாதஸ்வரக் கச்சேரியென்றும், பாட்டுக் கச்சேரியென்றும் நடத்தி வீண் டம்பங்கள் செய்யப்பார்க்கிற அதிகாரிகள் "விஷ்ணுவாலயங்களுக்கு முக்கியமான சிறப்பு திவ்ய ப்ரபந்த பாராயணமாயிற்றே, அதனையன்றோ நாம் முதன் முதலாகக் கவனிக்கவேண்டும், அந்த ஸம்ருத்திக்குப் பிறகல்லவோ மற்ற ஸம்ருத்திகளைப் பார்க்கவேண்டும்" என்று சிறிதும் நினையாமல் அதை அடியோடு மறந்து, பாமரலௌகிகர்கள் தலையாட்டுவதற்கு வேண்டிய வழிகளில் வீணான டம்பச் செலவுகளைச் செய்துவருகிறார்களேயென்கிற பரிதாபமே முக்கியமாக இந்த வியாஸமெழுதத் தூண்டிற்று.

12. சில திவ்ய தேசங்களில் வந்து சேருகிற டிரஸ்டிகள், கீழே நாம் விரிவாக விவரித்த நீதிகளிலே சிறிதும் மதி செலுத்தாமல், தங்களுடைய இயற்கைக் கொள்கைக்கே மதிப்பு கொடுத்து "திவ்ய ப்ரபந்தமென்பது தமிழ்ப்பாட்டுத்தானே" என்று ஸாமான்யமாக நினைத்து அதனிடத்திலும் அதையோதுமவர்களிடத்திலும் அநாதரம் காட்டுமது கண்டு அவர்களுக்கு உண்மையான தமிழ்வேதப் பெருமையைக் காட்ட வேண்டியும் இந்த வியாஸம் எழுதப்புகுந்தது. திவ்ய தேசங்களுக்குக் கீழே விவரித்த பெருமைகள் தவிர மற்றொரு பெருமையும் இங்குத் தெரிவிக்கிறோம். ஆங்காங்கு கோவில்களில் எம்பெருமான்களுக்கு வழங்கி வரும் திருநாமங்கள் பெரும்பாலும் ஆழ்வார்களின் திருவாக்கிலிருந்து அவதரித்தவைகளே அன்றுதொடங்கி ஆதரிக்கப்பட்டு வருகின்றன. ஒரு பெருமாளை (திருக்குடந்தையில்) ஆராவமுதே! என்று ஆழ்வார் விளித்தார். இந்தத் திருநாமம் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி தவிர வேறெங்குங் கிடையாது. இதுவே அந்த பகவானுக்கு உகப்பாகி இதை ஸம்ஸ்க்ருதப்படுத்தி அபர்யாப்தாம்ருதமென்கிறார்கள். ஆழ்வார் நாகைப்பட்டணமென்கிற திருநாகைக்கு எழுந்தருளி அவ்வூர்ப்பெருமாளுடைய அழகிலேயீடுபட்டு *அச்சோவொருவர் அழகியவா! என்று ஒருகாலைக்கு ஒன்பதின்கால் சொன்னார். இதைக்கொண்டே அப்பெருமாளுக்கு ஸௌந்தர்யராஜனென்று திருநாமமிட்டனர். ஆழ்வார் திருப்புட்குழி-

acharya.org

யெம்பெருமானைப் பாடுகையில் ''புட்குழியெம் போரேற்றை'' என்றார்; போரேறு என்கிற தமிழத் திருநாமத்தையே வடமொழியில் ஸமரபுங்கவ: என்றுக்கினர். மலையாளத்தில் திருச்சிற்றாறு என்கிற திவ்ய தேசத்தில் சென்று பெருமாள் திருநாமம் என்னவென்று போத்திகளைக் கேட்டால் ''இமையவரப்பனென்னப்பன்'' என்று உங்கள் ஆழ்வார்கள் பாடின திருநாமந்தான் என்கிறார்கள். திருக்கண்ணமங்கையிற்சென்று பெருமாள் திருநாமமென்னவென்று கேட்டால் ''ப்ருஹத்பஹிஸ்ஸிந்து நாதன்'' என்கிறார்கள். பெரும்புறக்கடலை என்று திருமங்கையாழ்வார் திருவாக்கில் வந்ததையே வடமொழிப்படுத்திவிட்டார்கள். இந்த வகையில் தெரிவிக்கவேண்டிய விசேஷங்கள் பலபலவுண்டு. நம் தேவப்பெருமாளுக்கு வழங்கிவரும் பேரருளாளனென்னுந் திருநாமமும் ஆழ்வார் திருவாக்கில் வந்ததுபற்றியே கொள்ளப்பட்டது.

13. ப்ரஸங்காத், காஞ்சீபுரம் ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தைப்பற்றிச் சிறிது பேசுகிறோம். இந்த தேவஸ்தானத்தில் சில காலம் ஏகதேசமாக தர்ம கர்த்ரு பதவியை வஹித்து வந்த தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்ம பரிபாலனங்களை ஒழுங்குபாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும் சுமார் 70 வருஷங்களுக்குமுன் வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. அது 65 வருஷங்களுக்கு முன் சென்னை ஹைகோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது. எங்ஙனேயென்னில், தாதாசார்ய வம்சஸ்தர்களில் ஐந்துபேர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு வருஷத்தில் ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் ட்ரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்திவர வேண்டியதென்றும், இவர்கள் அநீதியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை செய்து நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்கு மேல் ஒரு ஸூபர்விஷன் போர்டு இருக்க வேண்டியதென்றும், அந்த போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீவைஷ்ணவர்; (தாதாசார்யரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும், அவசியம் நேருங்காலங்களில் இந்த ஸ்கீமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும் முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் பதினைந்து வருஷகாலம் நடந்து வந்தது.

acharya.org

